தீரா காந்தி செப்பவளத்
திருவாய் முத்தந் தருகவே
செல்வா நின்றன் மெய்ம்மணக்குந்
திருவாய் முத்தந் தருகவே. ௬.

வேறு.

இறைமனம் இன்புற அறம்புரி நின்னை
இப்புவி மக்கள்சிலர்
எங்கெருந் தோவங் கிங்குசெய் சட்டம்
கடந்தனை எனச்சொல்லி
சிறைசெய்து நீதி மன்றக் கேற்றிச்
செப்புக மொழியென்னச்
சிலரே அரங்கத் தன்று மொழிந்த
இன்மைகொள் திருமொழியைத்
தரைமலி இரவி தாமுள வரையும்
தங்கத் தேடுசெய்து
சாலப் பதித்தே அநுதின மும்மது
சாற்றற் கரியதகு
முறையுள தன்றால் அத்திரு வாய்தல்
முத்தம் அளித்தருளே
மொழிவழி உறையும் மோகன தாச
முத்தம் அளித்தருளே. ௭.

தீன்வழக் கதனில் தீர்ப்புரை அறிபர்
நின்வய மேயாகி
நிலவிய ஆங்கிலச் சட்டப் படியே
நினைச்சிறை புகல்வதற்குத்

தன்மனத் தெணியுன் தகுதியை நோக்கிச்
சஞ்சல மிகவுற்றுச்
சாலப் பலப்பல மாற்றம் உரைத்துத்
தண்டிக் கும்பொழுதும்
என்னினும் மிக்க இருங்களிப் புடையார்
எவரும் இரார்நீங்கள்
எழில்பெற விடுதலை பேற்றால் எனஅன்
றியம்பிய இன்னுரையை
முன்னி மகிழ்ந்தேன் முனிவறி யாதாய்
முத்தம் அளித்தருளே.
மொழிவழி உறையும் மோகன தாச
முத்தம் அளித்தருளே. அ.

இந்தியர் ஆருயிர் நீயென இயம்பல்
இம்மியும் மிகையில்லை
இத்தகை உயிர்உடல் நீங்கிடு மோவென்
றெண்ணத் தக்கதில்லை
வந்த பெரும்பிணி வாலன் றுன்னுடல்
வாள்கொண் டறுக்குமுன்னர்
மருந்கமர் ஒருவர் நாட்டிற் கென்ன
மாற்றமை யாவென்னச்
சிந்தைகொண் டேதும் செப்ப மறுத்துச்
சிறையாள் ஆகும்நான்
செய்தி உரைத்தல் தகாதென மொழிந்த
செய்கையை என்னென்பேன்

முந்தி ஸீஸாந்தம் மொழிபகர் வாயால்
முத்தம் அளித்தருளே
மொழிவழி உறையும் மோகன தாச
முத்தம் அளித்தருளே. ௯.

இருமூன் றூண்டு சிறைவாழ் வேற்றே
ஏர்வா டாத்தலத்தில்
இனிதமர் நாளில் இரும்பிணி உறவே
எம்மான் உனைப்பூனாப்
பெருநகர் கொடுபோய்ச் சாருன் வைத்ய
சாலை பிறங்கவைத்துப்
பெரும்புகழ் கொண்டார் மாடாக் ஆண்டு
பெரியோய் நீபெற்ற
அருமுப சாரம் யாரே பெற்றார்
அரசரில் வந்தாலும்
அடைதற் கரிதே சிறையாள் ஆன
ஐயநீ பெற்றவது
முருகமர் செயலோய் முன்னிய புரிவோய்
முத்தம் அளித்தருளே
மொழிவழி உறையும் மோகன தாச
முத்தம் அளித்தருளே. ௧௦.

ஆகச் செய்யுள் ௫௦.



## ௬. வருகைப் பருவம்.

---

தூய்ய வருக பாரதநாட்
டரசே வருக உலகிற்கோர்
அணியே வருக அடியேனை
ஆண்டாய் வருக அவனியெலாம்
உய்ய வருக உயிர்க்கெல்லாம்
உயிரே வருக உத்தமரின்
உணர்வே வருக ஓராடை
உடுத்தாய் வருக உண்மையுரை
செய்ய வருக பூமிக்கோர்
திலக வருக தெருளளிக்கும்
செல்வ வருக நெறிதிறம்பாச்
செம்மல் வருக சீர்மருவு
தய்ய வருக கருணைபுரி
காந்தி வருக வருகவே
கருத்திற் கிசைந்த கஸ்தூரி
கணவா வருக வருகவே. ௧.

காந்தி வருக கருணைபுரி
கடலே வருக ஏழையேன்
கண்ணே வருக இந்தியரின்
கருத்தே வருக என்னன்பை

மாந்தா வருக மக்களுய
　　வந்தாய் வருக பழஅறத்தை
　வகுத்தாய் வருக வடிவுடைய
　　வள்ளால் வருக மண்முழுதும்
சாந்தி நிலவ உரையருளும்
　　சான்றோய் வருக தண்ணளிசேர்
　தலைவ வருக தார்மன்னர்
　　தருமச் செங்கோல் தாங்க அருள்
காந்தி வருக அருள்பழுத்த
　　கனியே வருக வருகவே
　கருத்திற் கிசைந்த கஸ்தூரி
　　கணவா வருக வருகவே. ௨.

எந்தாய் வருக எழிலாரும்
　　எம்மான் வருக எனையாளும்
　இறைவா வருக ஏழையேன்
　　இதயங் கொளநின் இணையடியைத்
தந்தாய் வருக சன்மார்க்கஞ்
　　சார்ந்து தமியேன் கடைத்தேறத்
　தன்மை ஒழுக அருளுபெருங்
　　தகையே வருக சாந்தத்தின்
மைந்தா வருக எந்தனிரு
　　கண்ணே வருக கண்ணினுறு
　மணியே வருக ஆருயிரே
　　வருக சிறியேன் பாட்டுக்கு

கந்தே வருக கருதரிய
காந்தி வருக வருகவே
கருத்திற் கிசைந்த கஸ்தூரி
கணவா வருக வருகவே. ௩.

பெருமை வருக அறமலியப்
பிறந்தோய் வருக பீடுடைய
பெம்மான் வருக புவிக்குள்ளே
பெரியோய் வருக பிறர்பொருட்டா
அருமை உறுநின் உடல்பொருளும்
ஆவி மக்கள் மனையாதி
அனைத்தும் விடுத்தோர் கதராடை
அணிந்தே எழ்மை நிலைகொண்ட
தரும உருவே வருகவெலாஞ்
சாற்றல் எளிய அவ்வண்ணஞ்
சாதித் திடுதில் அரியவெனுஞ்
சான்ற புலவன் உரைமறுத்துக்
கருமம் ஆற்றிப் பின்புசொலும்
காந்தி வருக வருகவே
கருத்திற் கிசைந்த கஸ்தூரி
கணவா வருக வருகவே. ௪.

ஞாலம் மதிக்கும் பெருங்கொள்கை
நாட்ட வருக கதர்ப்பெருமை
நவில வருக தீண்டாமை
நலிய வருக நாட்டேந்தச்

சீல வருக ஐம்பாவம்
தேய வருக சிறுதகையேன்
திருந்த வருக நினையெலாம்
திறம்ப வருக திருக்கருணை
சால வருக தனியாடை
தரிக்க வருக சாந்தநிலை
ததும்ப வருக தருக்கனைத்தும்
சாக வருக தாரணியிக்
காலம் உய்யப் பிறந்தருளுங்
காந்தி வருக வருகவே
கருத்திற் கிசைந்த கஸ்தூரி
கணவா வருக வருகவே ௫.

வள்ளால் வருக பாரதத்தாய்
மைந்தா வருக மண்முழுதும்
மதிக்க வாழும் மாண்புடைய
மணியே வருக மறுமையெனும்
தள்ளாப் பொருளொன் றுளதென்னுந்
தன்மை யறியா தறங்கொன்று
தாய்நா டாளுந் தனியுரிமை
தகைசால் மக்கட் கில்லையென
எல்லா எவர்க்கும் அதிபரெனும்
இறுமாப் புற்று நனியுழல்வோர்க்
கினிய உரைதந் திடேற்ற
என்றும் பெரியோய் வருகவே

நள்ளார் மகள்க்கும் அறிவளிக்கும்
காந்தி வருக வருகவே
கருத்திற் கிசைந்த கஸ்தூரி
கணவா வருக வருகவே. ௬.

சாதி சமயச் சண்டையெனுஞ்
சுழியிற் பட்டுத் தடுமாறிச்
சத்தியத்தை அறமறந்து
தருக்கிக் குலத்தாற் பெரியோனான்
பேதை சிறியன் நீபிறப்பில்
என்னப் பிதற்றிப் பெரியாரைப்
பிழைப்ப தன்றிப் பொருளாலும்
தொழிலாற் பிறவாற் பெருமைசொலும்
ஏதிலார்க்கும் இனியமொழி
இயம்பி அவர்கள் கொள்கையெலாம்
இருள்போல் ஏகப் பேரொளியை
எங்கும் பரப்பும் இணையில்லாய்
காதல் கொண்டுன் அடிசேர்ந்தேன்
காந்தி வருக வருகவே
கருத்திற் கிசைந்த கஸ்தூரி
கணவா வருக வருகவே. ௭.

சாந்தம் என்னும் பெருங்கடலில்
சத்யம் என்னுந் தூணாட்டித்
தகைசால் பொறையை மத்தாக்கித்
தருமம் என்னும் நாண்போக்கி

வாய்ந்த அவற்றின் இருமருங்கும்
மல்லல் மிக்க இந்துமுசல்
மான்கள் என்னும் இருவேறு
மதத்து ளாரும் வலிந்திழுக்க
ஈந்த பயனுய் எழுந்தபெரும்
இன்பம் என்னும் ஆரமுதை
இறைமால் ஒப்பாய் இவ்வுலகில்
எல்லா உயிரும் உயவருளிக்
காந்தம் எனவே அன்பிழுக்குங்
காந்தி வருக வருகவே
கருத்திற் கிசைந்த கஸ்தூரி
கணவா வருக வருகவே. அ.

செந்நெல் விளையுந் திருநாடு
செழிக்க உலகம் நீகெறியில்
செல்லா துய்யச் சிறுமையெலாம்
சென்று தேய அறந்தழைக்க
மன்னர் செங்கோல் வழுவாது
மாண்பிற் செல்ல மதுவருந்தும்
மடமை ஒழிய மக்கள்தமை
மதியா தொதுக்கும் மருளகல
இன்னல் நல்குஞ் சாதிமத
இறுமாப் பேக என்னனையார்
இதயங் களிக்க விளையாட
இம்மா நிலத்திற் பிறந்தருளுங்

கன்னல் அனைய திருமொழிசேர்
காந்தி வருக வருகவே
கருத்திற் கிசைந்த கஸ்தூரி
கலாவா வருக வருகவே. ௬.

வேறு.

அறமலி திருநா டவனியில் உயர
அணிபெற வருக வருகவே
அடியவர் உளமகிழ் தரமொழி பகரும்
ஆண்டகை வருக வருகவே
மறமறப் பிறந்த வடித்துத் தெளித்த
மாண்குண வருக வருகவே
மன்னறம் நிலைபெற வகுத்தினி தருளும்
வள்ளால் வருக வருகவே
உறுதியின் ஒப்புயர் வொருவரும் இல்லா
உரவோய் வருக வருகவே
உண்மை பொறுமை வீரமஞ் சாமை
உறுத்வ வருக வருகவே
திறமையின் அளிமிகு செயல்செயும் அந்தணச்
சீல வருக வருகவே
திண்மைகொள் அன்பர் மனத்துறை காந்திச்
செல்வ வருக வருகவே ௧௦.

ஆகச் செய்யுள் ௬௦.



# எ. அம்புலிப் பருவம்.

---

விண்ணுறையும் மாமதியே மேதினிக்குக் கைம்மாறு
வேண்டாமல் வெண்மையான
மென்மையுறு பாலனைய நிலவெனும்நின்
விரும்பிதனி ஈயுமேலாம் [மெய்யொளியை
தண்ணளிமிக் குடையாய்நீ-எனஉலகம் சாற்றிடுமால்
சத்தியமே சாருவாயும் [ளிகள்
சாந்தநிறை திருமனமுஞ் சகத்திலுள தண்ண
யாவுமொரு உருவெடுத்து
மண்ணுலகம் கனிவாழ மழையெனவே அருளொழுக
மானுடை ஒன்றுடுத்து
வருகாந்தி அடிகளெனும் வள்ளலவளி யோடுன்றன்
வளரவியை ஆயவேண்டும்
அன்னல்நிகர் இல்லாத அருமைமிகு காந்தியினோ
டம்புலீஇ ஆடவாவே
அன்பதனால் உலகாளும் ஐயனுயர் காந்தியினோ
டம்புலீஇ ஆடவாவே. க.

மக்களுயர் வழிபற்றிக் கொலையாதி பாதகத்துள்
மன்னுமல் வாழவைத்தல்
மரபாகும் பெரியோர்க்கவ் வழிபார்க்கின் காந்தி
மாதவனின் மாண்புநோக்கின் [யெனும்

ஒக்குமுழு வதுமன்றுன் ஒளிமுன்னர் கொலைகள்வு
கட்காம மோடுபொய்யும்
ஓடிடுமீ துலகறிந்த தொன்றேகாண் உம்பருறை
உன்தோற்றத் துறுவதன்றோ
அக்கணொரு மூன்றுடையான் காய்ந்தவனென் றவனி
அருவமதாய் நின்றமாறன் [சொலும்
அணிவிழவே ஆதலினால் அவனுடான் உடனென்
ஐயம்நீ கொள்ளவேண்டாம் [றே
அக்கணமே உனைப்புனிதம் ஆக்கியுடன் ஆடிடுவான்
அம்புலீஇ ஆடவாவே
அன்பதனால் உலகாளும் லீலவனுயர் காந்தியினோ
டம்புலீஇ ஆடவாவே. உ.

நாம்விண்ணில் உறைகின்றோம் அவன்மண்ணில்
நாமவனோ டாடநேரல் [உறைகின்றான்
நம்பெருமைக் கழகன்றேன் றெண்ணுவையோ
நன்றுநின தெண்ணநீதான் [மாமதியே
போம்நாட்டில் யாண்டில்லைப் புண்ணியனின் புகழு
புவியறியப் புகலுவாயே [ண்மை
புந்திவிரி வில்லாமல் இல்லன்றிப் பிறிதறியார்
போன்றவன்நீ அல்லையே
தாமதிகம் உலகிலெனத் தருக்கோடு வாழ்ந்திடுவார்
தாங்களுமே பெரியரென்னச்
சாற்றியதன் றியாரையவர் யாண்டுறைந்தா லென்
தக்கவர்பார்த் தடைதலேமேல் [னகுறை

ஆமென்பர் அறிவுள்ளார் ஆதலினால் தாமாமல்
அம்புலீஇ ஆடவாவே
அன்பதனால் உலகாளும் ஐயனுயர் சாந்தியினோ
டம்புலீஇ ஆடவாவே. ங.

திங்களேஎ உனையரவந் தீண்டிவருத் திடுதுயரைத்
தீர்த்துய்ய என்னமுன் டேல்
சென்றுலகம் எங்குந்தி ரிந்தாலும் ஆகாது
செப்பிடுவேன் அதற்குபாயம்
எங்களுயர் நாயகனிவ் விருப்புளியில் ஈடில்லான்
எல்லாப்பொ ருக்குமெம்மான் [ரும்
இடாகலச் சபர்மதியில் எழுந்தருளி இனிதிருக்
இணையில்சீர் கொண்டஎந்தை
பொங்குதிருக் கமலமலர் போதாவிப் பழிதிரும்
புயங்கனவன் அன்பனன்றும்
புயத்தினொடு மடிதனிலும் எறிவினை யாடுகதை
புவியறியும் ஆதலாலே
அங்கண்வந் தின்புபெற அன்னமெல சாந்தியினோ
டம்புலீஇ ஆடவாவே
அன்பதனால் உலகாளும் ஐயனுயர் சாந்தியினோ
டம்புலீஇ ஆடவாவே. ச.

நீகலைகள் ஈரெட்டே தாமுடையாய் நேயனவன்
நெய்தவொற்றைக் கலையொடெண்ணில்
நேரான பல்கலைகள் தாமுடையான் நினக்குமரு
உண்டன்றான் மருவிலாதான்

வாருடைய மழைமறைத்தால் ஒளிகுறைவாய் அவ
வலிகொண்டு மறைக்கவல்லார் [ஞெனிலை
மண்ணகத்தும் வானகத்தும் யாண்டுமிலை
நாளும் வரிசையாகத் [மாமதியே
தேகந்தான் தேய்ந்தழிவாய் ஒளிகுறைவாய் பின்
இன்மைநிறை எங்களையன் [மிகுவாய்
ரான நிறைவுள்ளான் நின்தோற்றம் இரவிற்றான்
சிலஞெளி இறையுநீங்கா
தாகவுள தாதலினால் அப்பெரிய அண்ணலினோ
டம்புலீஇ ஆடவாவே
அன்பதனால் உலகாளும் ஐயனுயர் காந்தியினோ
டம்புலீஇ ஆடவாவே. ரு.

சத்தியத்தைத் தருமத்தைச் சாந்தத்தைத் தைரியத்
தனிப்பொறையைக் கருணைதன்னைச் தைத்
சத்யாக்கிரகமென்னுந் தாணிபுகழ் இயக்கத்தின்
தத்துவத்தைச் சாற்றியன்பாய்க்
கத்தருடை உதவிடுவீான் கட்டிமகிழ் வெய்திடலாம்
கூனக்கிட்டு சைக்கவொண்ணுக்
கன்னியமி குந்ததுணைகொட்டு நூல்கொண்டு
கைத்தறியில் நெய்ததாமல்
நத்தியுனை நனியேற்று நாடறிந்த நின்களங்கம்
நலிந்தோட ஞானமெய்த
நாட்டமது வைத்திடுவான் எங்காந்தி அன்னவனை
நாடிவர நல்லொழுக்கம்

அத்தனையும் எய்திடலாம் ஆதனினல் அன்னமேனே
டம்புலீஇ ஆடவாவே.
அன்பதனல் உலகாளும் ஐயனுயர் காந்தியினே
டம்புலீஇ ஆடவாவே. ௬.

ஒழுக்கமது விழுப்பத்தைத் தருதலினல் அவ்வொழு
உயிரினும் உயர்ந்ததாக [க்கம்
ஓம்புதகை மிக்கதென உரைத்ததிரு வள்ளுவனுர்
உண்மையுரை கொண்டுசெய்கை
இழைத்தவருள் இணையில்லை எனவொன்றெடுத்
ஏதமிலா எந்தையெம்மான் [தேத்தும்
இன்னதகை என்றுதான் மருமாதர் இன்முகத்தை
எந்நாளும் நோக்கிலாத
விழுப்பமுளான் எங்காந்தி மேனுள்நீ குருமனையை
விழைந்தல்லல் உற்றையென்ப
மேதகவோன் முனிவானே எனவஞ்சி வினை
ஒழியாமல் மேவுவாயே [யாடல்
அழுத்தமுற மதிபுகல்வான் முனிவறியான் ஆதலி
அம்புலீஇ ஆடவாவே [னல்
அன்பதனல் உலகாளும் ஐயனுயர் காந்தியினே
டம்புலீஇ ஆடவாவே. எ.

மறைபுகலும் நெறியதனை வடிகட்டி இனிதெடுத்து
மன்னுலக மாந்தருய்ய
மாண்புமிகும் அறநெறியை மாசில்லா ஒழுக்கத்தை
மன்னுத உடலைநோக்கிப்

பறையரென் ஒருசாரார் பரிதபிக்க ஒதுக்குநின்ற
பாதகம்மாள் வழியையிப்
பாராளும் உரிமைஇந் நாட்டார்க்கே உளதென்னும்
பண்பைக்கட் குடிவிலக்கை
அறைகூவு மான்புசெறி அருட்கடலைக் குணக்குன்
அடியாரின் இருதபத்தில் [றை
அணிபெறவீற் றிருந்தருளும் அண்ணலைஇந் நிலை
அரசியலின் வாதியென்னல் [யில்லா
அறியாமை அறியாமை ஆதலினால் அஞ்சாமல்
அம்புலீஇ ஆடவாவே
அன்பதனால் உலகாளும் ஐயனுயர் காந்தியினோ
டம்புலீஇ ஆடவாவே. அ.

இழையாயி ரம்பெற்ற எழிலாடை பண்டைநாள்
ஈன்றுபெரு மிதமடைந்த
இணையில்சீர் சேர்நந்நா டின்றுடை எதுமிலா
திரங்கிப்பல் இன்னலுற்றுத்
தழையாடை யாக்கொண்டு தருமநெறி அறியாது
தருசூழுங் கானகத்தில்
தாய்த்திரியும் விலங்குகள்போற் சஞ்சரித்தே
தருக்காதி கொண்டுசிறுங் [இந்நாளில்
குழையாத பிறநாட்டை உடல்மறைக்க எதிர்பார்த்
குற்றமத ளுறுபர்ந்த [தல்
கோதில்லாக் கதராடை குவலயத்தே பெருக்கு
கூறுயெழிற் கூர்ஜரம்வாழ் [மெனக்

அழையாமல் அவனிக்கே அருள்புரியும் அண்ணா
டம்புலீஇ ஆடவாரவே [வினே
அன்பதனல் உலகாளும் ஐயனுயர் காந்தியினே
டம்புலீஇ ஆடவாவே. ௯.

இழுக்காக அடிமையெனும் படுகுழியில் வீழ்த்துவந்து
எழிலாடை கொண்டுதேச
இரும்பொருளைப் பிறநாட்டுக் கனுப்புதலே ஆகலி
இஃதோர்ந்து நமதுமக்கள் [னல்
பிழைக்கவழி கதராடை பேணுதலே ஆகுமெனப்
பிறங்கிடவே மொழிந்தபின்னும்
பெருமைமிகு நாட்டிற்காப் பிறபலசெய் யாவிடி
பிடுபெறு கதருடுத்தும் [னும்
ஒழுக்கமதைக் கொள்ளாதார் மனத்திருந்த வேண்டு
ஒப்பற்ற பொருளைகாடி [மென
உறுதவமே செய்கின்ற ஒண்புகழான் தன்னளி
ஒன்னலரென் றெவருமில்லான் [யான்
அழுக்காற வாவெகுளி இன்னச்சொல் இல்லானே
டம்புலீஇ ஆடவாவே
அன்பதனல் உலகாளும் ஐயனுயர் காந்தியினே
டம்புலீஇ ஆடவாவே. ௧௦.

ஆகச் செய்யுள் ௭௦.



# அ. சிற்றிற் பருவம்.

குற்றம் புரிந்தாய் நீயென்னக்
கொண்டு நீதிக் தலத்திட்டுக்
கூறு வாக்கு மூலமெனக்
கோணு துள்ளம் பெருங்கதையாய்ச்
செற்றம் இன்றி நீமொழிந்த
திருவா சகத்தின் சுருக்கத்தின்
செய்தி தன்னைச் சிறுதகையேன்
செப்ப விழைந்தேன் இத்தமிழில்
இற்றை அரசாங் கத்துடனே
இனிய அன்பு கொண்டிருந்த
என்றன் உள்ளம் மாறியதற்
கேற்ற அதனை எல்லோருந்
தெற்றென் றறிய உரைப்பனெனுந்
தீரா சிற்றில் சிதையேலே
சிறியேன் உள்ளத் தமர்காந்தித்
தேவா சிற்றில் சிதையேலே. க.

தென்னுப் பிரிக்கா சென்றங்கு
சிறுமை உற்ற இந்தியரைத்
தேற்ற எண்ணிச் செயல்புரிந்து
செகத்திற் பிறந்த எவருமடை

மன்னுடரிமை இந்தியனாய்
வந்த அரிய காரணத்தில்
மறுக்கப் பட்டேன் அதுகொண்டு
மயங்கா தந்த அரசினுக்கே
இன்னாப் பழுதாம் இந்தியரை
இவ்வா றிகழ்தல் எனஇதயத்
தெண்ணி அவரோ டொத்துழைத்தேன்
என்ன மொழிந்த எம்மானே
தென்னார் காந்தி புத்திரிபாய்
சிறுவா சிற்றில் சிதையேலே
சிறியேன் உள்ளத் தமர்காந்தித்
தேவா சிற்றில் சிதையேலே. ௨

போயர் அமர்க்குப் படைதிரட்டிப்
பிறங்கக் கொடுத்தேன் ஜுலுவென்போர்
புரட்சிக் குதவி நனிபுரிந்தேன்
புகழ்ந்தார் அந்த ஆப்பிரிக்கா
ஆய நிலை அரசாள்வோர்
அறிக்கை அதனால் அந்நாளில்
அரசப் பிரதி நிதியென்பார்,
அளித்தார் பொன்னின் பதக்கமதை
மேய ஜெர்மன் பெரும்போர்க்கு
விரும்பிப் படையைச் சேர்த்தளித்தேன்
விழைந்திவ் வாறு உதவிசெய்தால்
மேன்மை பெறலாம் என்றென்று.

தேயம் மதிக்க உரைசெய்த
செல்வா சிற்றில் சிதையேலே
சிறியேன் உள்ளத் தமர்காந்தித்
தேவா சிற்றில் சிதையேலே. ௮.

நன்று கிடைக்கும் என்றெண்ணி
நானிவ் வாறு உதவிசெய
நாவை யடைக்கும் பெரும்பூட்டாய்
நவிலும் சௌலட் சட்டமது
மன்றம் ஏறி வந்ததந்த
மறத்தைப் போக்க ஓரியக்கம்
வகுக்க வேண்டி யானதுபின்
மாபாஞ் சாலந் தனிலந்தோ
கொன்று மலையாக் குவித்தபெருங்
கொடிய கொலையுந் தோன்றியதால்
குருவைக் காக்கத் துருக்கர்க்குக்
கொடுத்த வாக்கைக் காக்காமல்
தின்று விட்டார் மந்திரியெனுந்
தீரா சிற்றில் சிதையேலே
சிறியேன் உள்ளத் தமர்காந்தித்
தேவா சிற்றில் சிதையேலே. ௯.

இன்ன செய்கை கண்டபினும்
எதிர்க்க உள்ளத் தெண்ணாமல்
எந்தன் உயிரின் துணைவர்பலர்
இயப்பும் மொழியுங் கொள்ளாமல்

பின்னும் ஒத்தே உழைக்கவெனப்
பேசித் தந்த திருத்தத்தைப்
பெரிய தேச சபைமுன்னர்ப்
பெற்றுக் கொளமன் றாடினனைப்
பின்னற் கரிய பாஞ்சாலப்
பழிக்கும் முஸ்லீம் குருவுக்கும்
பரிகா ரங்கள் கிடைக்குமெனும்
பண்பைக் கொண்டே எனமொழிந்த
சென்னி உலகுக் கெனத்திகழுந்
திருவே சிற்றில் சிதையேலே
சிறியேன் உள்ளத் தமர்காந்தித்
தேவா சிற்றில் சிதையேலே. ௫.

நீள்பாஞ் சாலப் படுகொலைக்கு
நீதி ஏதுங் கண்டில்லேன்
நீக்கம் பெறவும் பெற்றிலராய்
நிற்கின் றனர்சிலவர்
மூளுங் காதல் கொடுசிலர்க்கு
முன்னிப் பரிசும் ஈகின்றார்
மொழிபொய்த் ததற்கும் ஒன்றுமிலை
முடித்துக் கொடுத்த சீர்திருத்தம்
வாளா அன்றி பற்றில்லை
வறுமைப் பிணியால் வாட்டமுறும்
மக்கள் உய்ய வழியில்லை
மனத்துட் கொண்டேன் இவையெனும்புத்

தேவிர் பரவும் திருநாட்டுச்
செல்வா சிற்றில் சிதையேலே
சிறியேன் உள்ளத் தயர்காந்தித்
தேவா சிற்றில் சிதையேலே. சு.

இந்தியர் எய்துந் துயர்தன்னை
எடுத்துப் புகல்வோர் எல்லோரும்
ஏதஞ் சாரும் சிறையெய்தி
இன்னல் ஏற்றங் குறைவதையும்
நொந்து துன்பம் அடைவதையும்
நோக்கி அவரோ டொத்துழையா
நுவலற் கரிய கருணைநெறி
நோன்பை மக்கள் எளிதாகச்
சிந்தை கொள்ளத் தந்தனனல்
சிற்றம் இறைபால் என்றனக்குச்
சிறிதும் இல்லை எனமொழிந்த
செம்மை மிக்க சீர்நம்பி
செந்தாமரையாள் திகழ்நாட்டுச்
செல்வா சிற்றில் சிதையேலே
சிறியேன் உள்ளத் தயர்காந்தித்
தேவா சிற்றில் சிதையேலே. எ.

ஆன இந்த அரசாட்சி
அடியேன் கொள்ளேன் அதில்வெறுப்பை
அடைதல் மேலாம் குணமென்ன
அணிந்தேன் ஆண்மை தனையழிக்கும்

ஈனங் கொண்ட ஆட்சியதை
        ஏற்றல் பாபம் எனவுணர்ந்தேன்
    இழிக்கும் நீதோ டுறவாடேன்
        எழிலார் நன்மை பற்றுங்கால்
நானே அடைவேன் எதுவரினும்
        நன்கு பொறுப்பேன் துயரையெலாம்
    நலிய மாட்டேன் எற்கிவையே
        நல்ல கடமை எனநவின்ற
தேனே ஒழுகு இன்மைசெறி
        சீரா சிற்றில் சிதையேலே
    சிறியேன் உள்ளத் தமர்காந்தித்
        தேவா சிற்றில் சிதையேலே. ௮.

கடமை யாக நான்கொண்ட
        காரி யத்தைக் குற்றமெனக்
    கணிக்குஞ் சட்டம் தனையறிந்தே
        கருதுந் தண்டந் தனையேற்க
அடைந்தேன் ஈண்டச் சட்டமுறை
        அதுவே ஒழுங்கென் றகங்கொண்டால்
    ஆற்ற தண்டித் திடுகவன்றி
        அடியேன் செயலே இனிதோர்ந்து
கொடுமை சட்டம் நின்னுடைய
        கொள்கை சரியென் றறிவீரேல்
    கோது பொருந்தும் இப்பதவி
        கொள்ளா இன்றே விடுகவெனத்.

நிடமாய் நீதி பதிமுனை
செல்வா சிற்றில் சிதையேலே
சிறியேன் உள்ளத் தமர்காந்தித்
தேவா சிற்றில் சிதையேலே. ௯.

நியாயம் வகுக்கும் அதிபதியந்
நாள்நிற் பார்த்தே என்முன்னர்
நின்னை அனைய தகுதியுளார்
நின்ற தில்லை இதுகாறும்
அயாவு னைப்போல் இனிமேலும்
அடையப் போவ தில்லையுனை
அறிவேன் நன்றாய் நீயுரைக்கும்
அஹிம்சை ஆதி அறத்தையென
வயிரவோ டுரைத்துப் பற்பல்புகழ்
வழுத்தப் பெற்றாய் என்றாலுன்
மாட்சி உரைக்க வல்லேனிம்
மதியில் ஏழைச் சிறியேனே
தியாக உருவே அன்புசெறி
தீரா சிற்றில் சிதையேலே
சிறியேன் உள்ளத் தமர்காந்தித்
தேவா சிற்றில் சிதையேலே. ௧0.

ஆகச் செய்யுள் ௮0.



## ௮. சிறுபறைப் பருவம்.

---

தென்னாப்பி ரிக்காவில் நின்செயற்குத் துணைநின்ற
சிலபிரு கின்ற எங்கள்
திருமலிய அறம்வளர்த்த பலபெரியோர் அவத
சீர்த்தியுடைத் தமிழ்ப்பி றந்த [ரித்த
தென்னாட்டு நாகப்பன் வள்ளியம்மை சீர்நாரா
யண னிவர்கள் செய்கை தல்னைச்
செகமறியப் பலப்பலகால் செப்பிமகிழ் உத்தமனே
சிறந்ததமிழ் மொழியில் அந்நாள்
எந்நாடும் எம்மதமும் எம்மொழியும் எம்மனித
ரும்மென்றும் இதயம் எந்த
இனிதறத்தை வகுத்தருளும் எந்திருவள் ளுவர்
இலக்காகி ஈண்டு வந்த [குறள்கட்
செந்நாவாய் உண்மையினில் ஜெகத்குருவே சீர்க்
சிறுபறை முழக்கி யருளே [காந்தி
செல்வக்க ரஞ்சந்த்ரர் புத்திரிபாய் திருமகனே
சிறுபறை முழக்கி யருளே. ௧.

சீர்மலியுந் தமிழ்நாட்டில் திருமலியுந் தனவணிகர்
தெருமலிய அறம்வ ளர்க்கும்
சீர்த்திமலி வளப்பாண்டி மண்டலத்தில் திகழ்கா
குடியென்னுஞ் சீர்ப்ப திதனில் [ரைக்

நார்மலியப் பொறைமலிய நல்லுண்மை தாமலிய
நின்றுமறலும் ஆதி யாவும்
கனிமலிய உரைபகர்நாள் நாட்டன்பு சிறிதின்றி
நன்றுதார் நாடு நன்ருய்
ஏர்மலியப் பொருளிங்கே இழுக்குடைய மகவுனவை
ஈந்துமகார் வளர்த்தல் தன்னில்
இறந்துபட விடுதல்மேல் என அன்பால் உரை
எழில்மலியுங் காந்தி என்னுங் [விரித்த
தேர்மலியுந் திருவீதித் தென்னுட்டார் திருவுளமே
சிறுபறை முழக்கி யருளே
செல்வக்க ரஞ்சந்த்ரர் புத்திரியாய் திருமகனே
சிறுபறை முழக்கி யருளே. உ.

பொன்புரையுந் திருமேனி பொன்றப்புன் சிறைபுக்க
போதுமொரு துயரும் இன்றிப்
பொருமியழு துளம்நொந்த புண்ணியவித் திரு
புதல்வர்தமை இனிது நோக்கி [நாட்டுப்
அன்புரையாற் கதர்கதமொன் றறைந்தேகி அணிபெற
றிருந்தருளும் அறக்கொ முந்தே [வீற்
அடியேனின் இப்பிறப்பின் பயன்கதரைப் பெருக்
ஆகுமெனும் அண்ணல் ஏறே [குதலே
மன்பெரிய பயனடையும் நூல்பயிலல் அதனினுநான்
மாராட்டின் நூலை நூற்றல்
மாண்பெனவே மதிக்கின்றேன் என்றுரைக்கும்
மாநாடு வாழ வந்தோய் [மாமணியே

தென்பொதியுந் திருநாட்டிற் றிகழ்காந்திச் செம்ம
சிறுபறை முழக்கி யருளே [லேன
செல்வக்க ரஞ்சந்த்ரர் புத்திரியாய் திருமகனே
சிறுபறை முழக்கி யருளே. ௩.

ஊனடுக்கி ஒளிபெருக்கும் உத்தமனென் றுலகு
ஒருவனுளன் உலகில் ஆனல் [புகழ்
உனையன்றி வேறில்லை உன்னுணவின் அருமையினை
ஒண்புகழாம் ஒளியை ஓர்ந்து
நானடுக்கி நவிலுதற்கு வல்லவனோ நாப்பலபெற்
றுறுமவை நண்ணல் ஆமோ
நாகரிகம் என்றிந்நாள் நீளியாடை பலசுமந்து
நண்ணுமவர் நாண அன்பாய்
வானுடுக்கும் புகழ்கொண்ட மாண்புசெறி ஒருசிறிய
கதருடுத்தும் வள்ள லேஇம்
மண்மலிக்குந் தனிப்பெரிய மகத்சப்தம் இனிதேற்
வண்மைமிகு காந்தி மன்னு [ற
தேனடுக்கும் மலர்ப்பொழில்சூழ் திருப்பமுன நாட்ட
சிறுபறை முழக்கி யருளே [வனே.
செல்வக்க ரஞ்சந்த்ரர் புத்திரியாய் திருமகனே
சிறுபறை முழக்கி யருளே. ௪.

ஐம்பெரிய பாதகத்துள் மதுவருந்தல் ஒன்றெனவே
அறஞ்சொன்ன புலவர் அந்நாள்
அறைந்தவதை மனங்கொண்டே அவ்வினையால்
அழிந்துசெயல் இன்றி அந்தோ [மக்கள்பலர்

தம்பமெனத் தெருக்கிடக்க சாற்றிய இவ்விழிவாம்
தன்மையால் உவா மோடு
தனையரெலாம் தரித்திரத்தின் தனியேற்றுத் தளர்
தாங்கொண்ணாத் துன்பம் எய்தி [ந்துபல
வெம்பவினை உள்ளமதில் விரைந்தெணிஇந் நாட்ட
மேவியிட வேண்டு மானால் [றிவு
விரும்பவொணா இக்கள்ளை விட்டுவிட வேண்டு
விதியினொடு சேர்த்த மைத்த [மென
செம்பதுமத் திருமகிழச் செயல்புரிகாந் திச்செம்மல்
சிறுபறை முழக்கி யருளே
செல்வக்க ரஞ்சந்த்ரர் புத்திரியாய் திருமகனே
சிறுபறை முழக்கி யருளே. ரு.

தக்கதகா தனவோர்ந்து தருமத்தின் வழிச்சென்று
தாரணியெந் நாளும் வாழத்
தருகடமை தனையாற்றிச் சாற்றிய இன்பநிலை
சாருதலே தலத்து வந்த
மக்களுயர் கடனதற்கு மாசற்ற அறிவுதரு
மாண்புடைக் கல்வி வேண்டும்
வாழும்முறை பயிற்றாத சிலமொரு சிறிதுமிலா
வல்லடிமை கொளப்ப யிற்றும்
மிக்கவர்வே றில்லையென விளம்புதகை மேவரமேல்
வீடடைய அறிவி யாத
வெறுங்கல்வி பயனில்லை வேண்டாமப் பள்ளிதனை
விட்டின்னே விலகும் என்ற

செக்காரும் பொன்மேனிச் செகம்புகழ்காந் திப்
சிறுபறை முழக்கி யருளே [பெரிய
செல்வக்க ரஞ்சசந்த்ரர் புத்திரிபாய் திருமகனே
சிறுப்பறை முழக்கி யருளே. ௬.

வேறு.

சட்டச பைகளிற் சார்வதிற் பயனிலே
சார்ந்தவண் செய்வதெவன்
சான்றோர் அங்கிலே சனநலம் எனச்சில
சாதித் திடினுமவர்
இட்டப் படிசெய எல்லா உரிமையும்
எற்றிருக் கும்பொழுது
என்செய வல்லீர் அங்குசென் றந்தோ
எனிவ் இடர்ப்பாடு
திட்டம் உடன்பிற செயல்புரி வதில்நாள்
செலவிட் டால்தேசம்
செழிக்கும் பயன்தரு செயல்செயும் வீணே
சென்றுயர் குன்றதனில்
முட்டிய சூரியென மொய்ம்பழி யீரென
முழக்குக சிறுபறையே
மோகன தாஸ்கரம் சந்திர காந்தி
முழக்குக சிறுபறையே. ௭.

பாரிற் பாதகத் தொழிலெது என்னின்
பள்ளியிற் பயில்சிறிய
பச்சைக் குழந்தையும் பகரும் பொருளைப்
பகற்கொளி அடிப்பதுபோல்

நேரிற் பறித்துன் நியாய வாதியாம்
நெறியில் தொழிலின்றே
நின்றவ் வினையால் பாதகப் பொய்க்கு
நெஞ்சத் தச்சமிலா
நாரில் மக்கள் நலம்பெற் றுய்ய
நாடு செழித்தோங்க
நல்லன மலிய அல்லன நலிய
நல்லறி வெங்குமிக
மூரிப் பெரிய முளரிக் கையால்
முழக்குக சிறுபறையே
மோகன தாஸ்கரம் சந்திர காந்தி
முழக்குக சிறுபறையே. ௮.

பண்டிக் நாட்டிற் பஞ்சா யத்தெனப்
பண்புள மக்கள்தமைப்
பார்த்தூர் தோறும் அமைத்தனர் அவரும்
பாங்காய் வழக்குகளை
விண்டற நெறியே விளக்கினர் அன்னார்
மிகுதுலை நாவன்ன
மேதகு நடுநிலை தவறா வாய்மையர்
மேவுமிந் நாள்நிலையை
மண்டலம் அறியும் வாயாற் கூறினும்
மாசே மாசெனவே
மதிமிக உடைய வள்ளால் கருணை
மாபெரு வாரிதியை

மொண்டே பொழியும் மொய்ம்புடை மழையே
முழக்குக சிறுபறையே
மோகன தாஸ்கரம் சந்திர காந்தி
முழக்குக சிறுபறையே. ௯.

கதியடை பவர்போல் களிப்பொடு வினை
கண்ணியம் எனக்கொடுக்கும்
கருதின் பொருளெதும் இல்லா எழுத்தின்
கணமாம் பட்டமதை
நிதியென ஏற்பதில் பயனெதும் இல்லை
நிந்தனை ஒடுநம்மை
நினைப்பரும் இடரில் அழுத்திடும்* அவரொடு
நேர்ந்துற வாடிடுதல்
மதியல மான வாழ்க்கையை எண்ணி
வாழுதல் மேலன்றி
மானந் துறந்தும் பட்டந் தாங்குதல்
மாபல எனுமுயர்ந்த
முதுபுல வோர்கள் மொழிகளை ஓதி
முழக்குக சிறுபறையே
மோகன தாஸ்கரம் சந்திர காந்தி
முழக்குக சிறுபறையே. ௧௦.

ஆகச் செய்யுள் ௧௦.



## ௯. சிறுதேர்ப் பருவம்.

---

இந்துமுசல் மான்வேற்றுமையென்னுங் கொடிய
இறந்துபட்டோட இந்த [பிணி
இணையில்சீர்த் திருநாட்டில் பிறநாட்டின் ஆடை
எரிக்கிரை யதாகி வீழப் [யெலாம்
புந்தியிலாக் கள்ளருந்தும் புன்செய்கை அகன்றோடப்
பிள்ளையை அடிமை ஆக்கும்
பெரும்பள்ளிக் கூடங்கள் பெருமையழிந் தொழிய
பேசா வழக்கு மன்றம் [நெறி
முந்தியழி வெய்தியிட மொய்சட்ட சபைவைத்த
மோகம் பறந்து மாள
மொய்ம்போடு பொருளுமிலா வீண்பட்ட ஆசைகள்
மோதுபெற் றோடி ஒழியச்
சிந்தைநிறை அறியாமை சிதறுண்டு சென்றுநாளச்
சிறுதேர் உருட்டி அருளே
செகத்தினுயர் தனிக்காந்தி திகிரிபுனை செங்கை
சிறுதேர் உருட்டி அருளே. க. [யால்

இந்துமுக மதியரெனும் இருவேறு மதத்தினுறை
யாவரும் ஒன்று பட்டே
எதில்லார் தந்தீதை மோதிஉயர் வெய்தாமல்
இவர்க்குளே மாறு பட்டால்

வந்தவிடரும் துன்பங்கள் மாளாவெ னும்உண்மை
முனைந்துணா தொண்டினாரும்
மாறாமல் இவ்வொற்று மைநாடி மாற்றமுறை
வள்ளலே மாண்கு ணத்தோய்
எந்தஉயி ரும்நோவ இறையும்பொ றுக்காத
இணையிலாக் கருணை மூர்த்தி
எதுவரினும் அஞ்சாத இருமலையே பொறுமையாம்
எழிலுடைத் திஞ்செ ழுந்தேன்
சிந்துதிரு வாய்ச்செம்மல் செபல்வல்ல சிர்க்காந்தி
சிறுதேர் உருட்டி அருளே
செகத்திலுயர் தனிக்காந்தி திகிரிபுனை செங்கை
சிறுதேர் உருட்டி அருளே. உ. [யால்

வள்ளுவரும் பேம்பால் வகையினுற் றெப்பென்ன
வகுக்கலாம் அந்த ஞான
வள்ளலுயர் நெய்தொழிலின் மாண்பறிந்து கைக்
பேயமத் தொழிலை ஏற்றுப்பி [கொண்டார்
என்றுதுணம் இல்லாத மனைவியுளார் அவரதினும்
இம்மியுந் தாழ்வுறுத
எழில்மனைப பேயுடையாய் அவரந்தாள் மக்களுப
ஏதமில் அறமு ரைத்தார்
தன்னரிய அவ்வறத்தைத் தாழாமல் இற்றைநாட்
தகவுறித் தினிது பேயும்
சாற்றுகின்றுப் ஆதலினுல் தகுதியுடை நீஎங்கள்
தண்மையோ டினிமை சாரும்

தென்றுதமிழ் வள்ளுவனார் திருவைவென் றுயப்பிட
சிறுதேர் உருட்டி அருளே [ளாம்
செகத்தினுயர் தனிக்காந்தி திகிரிபுனை செங்கை
சிறுதேர் உருட்டி அருளே. ௩. [யால்

நின்னுடைய தொழிலெது வென் றறைந்தபொழு
தெய்தல்விவ சாய மென்றும் [தன்றைச்சீ
நீஎந்தக் குலமென்ன வினவுறுடி யானவனும்
என்றுமே நேர்மை யோடு
சொன்னமொழி கண்டுப்பின் சோப்பேறி ஆனபவர்
தூய்மைசேர் ஞாலம் இன்றித்
தொழிலொன்றை ஆற்றித்தொல் பிறப்பதனால்
தூசுநீங் கிடுவ தென்றோ [சாதிசொலும்
எவ்வபொருள் ஒன்றியற்றி மற்றொன்றன் பெயர்
கென்பதை அறிந்தி லேனால் [குறித்தற்
வனிந்த அறியாமை இதுசாக எழிலிறைவன்
என்றுளங் கொள்ளு வானோ.
சென்னிமிசை நின்சரண கமலமலர் சேர்த்தினேனென்
சிறுதேர் உருட்டி அருளே
செகத்தினுயர் தனிக்காந்தி திகிரிபுனை செங்கை
சிறுதேர் உருட்டி அருளே. ௪. [யால்

பொன்மணக்கத் திருவீதி புகழ்மணக்க வானளவும்
பொருவிலா அறங்கள் எல்லாம்
புவிமணக்கச் சைவநெறி பொலிவெய்தி மிகமணக்
புகலரும் சீர்த்தி போத [கப

நன்மனைக்க வாழ்ந்தந்நாள் நற்றனைவை சியவெனப்பேர்
நவிலவே இனி துறைந்த
நல்லவொரு சமுகத்தின் நவைகளைந்து பழம்பெரு
நாட்டவே ஞாலம் வந்த [மை
என்மனைக்க நெறிமனைக்கும் எழிற்காரைத் தனைவைசி
ஊழியர் சங்கம் அன்போ [யர்
டினிதளித்த பத்திரத்தில் நின்பெயரை உளங்
எய்தலாம் சாந்தப் ஏன்று [கொண்டால்
தென்மனைக்க உரைத்தமொழி திறம்பாத வாய்மையே
சிறுதேர் உருட்டி அருளே
செகத்திலுயர் தனிக்காந்தி திகிரிபுனை செங்கை
சிறுதேர் உருட்டி அருளே. ரு. [யால்

வேறு.

பான்மதி அரவஞ் சூடிய உமையாள்
பதிபர மேசுரனும்
பச்சை நிறந்திகழ் லெட்சுமி கொழுநன்
பாற்கடல் உறைவோனும்
மான்விழி மங்கை வெண்டா மரையாள்
மகிழ்நனும் அசுரர்களின்
வாழ்வு தொலைத்த வள்ளிம ணாள
வள்ளலும் வானவனும்
தேன்சொரி தருவின் இனிதுறை செல்வத்
தேவர்க் கிறையவனும்
தினமும் விரும்பும் திருவாழ் நாட்டில்
செனித்துப் புகழ்படைத்தோய்

ஊன்றிய அறிஞ உண்மைக் காந்தி
உருட்டுக சிறுதேரே
ஒப்புயர் வில்லா உத்தமர் ஏறே
உருட்டுக சிறுதேரே. சு.

இந்நில மாந்தர் இன்புற் றுயர
எழில்மட வாரெல்லாம்
எந்தக் குற்றைப ஏழை அடிமை
எவ்வுல கத்துமின்றித்
தன்னர் சோங்கித் தாரணி வாழத்
தருக்கா தியாவும்,
சாகத் தீமைகள் சட்டென் றழியத்
தருமமெ லாம்வளரப்
பன்னரு போர்த்தொழில் பறக்கக் கருணைப்
பார்புகழ் அமர்வினையே.
படர்ந்திந் ஞாலம் பரிசுத் தம்பெறப்
பார்வை புரிந்தருளி
ஒன்னலர் இல்லாய் ஊனமில் காந்தி
உருட்டுக சிறுதேரே
ஒப்புயர் வில்லா உத்தமர் ஏறே.
உருட்டுக சிறுதேரே. எ.

முழுதுல கினுநின் மொய்ம்பறி யாதார்
முன்னினி ராரென்றே
மொழிவது சிறிதும் மிகையிலை அறிஞர்
மொழிவழி ஒழுகியுனைத்

தொழுகுவர் உணர்வில் துரிசு பொருந்தும்
தொல்வினை உடையாரே
சூடா தன்னடி வேருய் வீழ்வர்
தோமறு நல்லோரின்
வழுவறு மனங்கள் மோகிக் குந்நலம்
வாய்த்தமை கொண்டுனக்கு
வழுத்தினர் பேரும் மோகனன் என்னும்
மாண்புத் திருநாமம்
ஒழுகுதல் கல்வி ஒருங்குடை காந்தி
உருட்டுக சிறுதேரே
ஒப்புயர் வில்லா உத்தமர் ஏறே
உருட்டுக சிறுதேரே. அ.

அன்னை எனினும் அத்தனே ஆயினும்
அறந்தவிர் ஆறுரைத்தால்
அதனைக் கடந்து அறங்காத் துயர்தல்
அணியுயர் மாந்தரவர்க்
கென்னைப் பெற்றோர் இழிதொழில் ஒன்றை
இயற்றென் றியம்புவரேல்
ஏற்கா தவர்மொழி தன்னைத் தள்ளி
என்கடன் செய்வனென
உன்னுயிர் மகற்கு நீசின்ற யுறுநாள்
ஒலைத் தூக்குவிட்ட
உண்மை திண்மை உறுதி சாந்தம்
ஓங்கிய புகழ்மிக்க

உன்னைத் தொழுதேன் ஒண்டவ காந்தி
உருட்டுக சிறுதேரோ
ஒப்புயர் வில்லா உத்தமர் வீறே
உருட்டுக சிறுதேரோ. ௯.

வேறு.

ஏராரும் புகழ்க்காந்தி யாங்களுபச் சிறுதேரை
இனிதே உருட்டி அருள்க
இணையிலாக் கஸ்தூரி எழிற்கணவ சிறுதேரை
இனிதே உருட்டி அருள்க
சீராரும் தேவதாஸ் திருத்தந்தாய் சிறுதேரைச்
சீக்கிரம் உருட்டி அருள்க
செல்வமலி பாரதத்தாய் திருமகனே சிறுதேரைச்
சீக்கிரம் உருட்டி அருள்க
நாராரும் நன்மக்கள் நாயகனே சிறுதேரை
நன்றாய் உருட்டி அருள்க
நன்மைக்கு நண்பனே நாடறிபச் சிறுதேரை
நன்றாய் உருட்டி அருள்க
பாரோரும் பண்புநிறை பாவலனே சிறுதேரைப்
பாங்காய் உருட்டி அருள்க
பழவறத்தை உலகிற்குப் பகரெந்தாய் சிறுதேரைப்
பாங்காய் உருட்டி அருள்க. ௧௦.

ஆகச் செய்யுள் ௧௦௦.

முற்றுப் பெற்றது.

வாழி.

காந்தியெனும் கருணைமொழி கவின்பேகம்
வாழ்க உலகத்து வாழும்
மாந்தரொடு பல்லுயிரும் வாழ்க அறம்
யாவுமினி வாழ்க வாழ்க
வாய்ந்தபுகழ் கொண்டன்று வாழ்ந்தபெரும்
பாரதத்தாய் வாழ்க எங்கள்
ஏந்துதமிழ் வாழ்ந்திடுக எழிலாரும்
அறவோர்கள் என்றும் வாழ்க.

# செய்யுள் முதற்குறிப் பகராதி.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வன்னால் | ... | வருலைப் | ... | ௪௦ | ௯ |
| வன்றுவர்சிர் | ... | சாப்புப் | ... | ௯ | ௮ |
| வன்றுவரும் | ... | சிறதேர்ப் | ... | ௯௯ | ௩ |
| வின்னுறையும் | ... | அம்புலிப் | ... | ௬௪ | ௧ |

# பிழை திருத்தம்.

| பிழை. | திருத்தம். | பக்கம். | வரி. |
|---|---|---|---|
| இறைவனார் | இறையவனார் | ௫ | ௧௭ |
| வருமகாத் | வந்தமகாத் | ௫ | ௨௦ |
| பிறகுணபாய்க | பிறகுணமாய்க் | ௯ | ௯ |
| தாலே | தாலோ | ௨௨ | ௨௧ |
| பாங்குரை | பாங்குறை | ௨௭ | ௧௧ |
| ஆகச்யெுள் | ஆகச்செய்யுள் | ௨௯ | ௨௩ |
| பாவயரைச் | பாவையரைச் | ௩௨ | ௨௩ |
| கருதரிய | கருதரிய | ௩௧ | ௰ |
| பொருளெுன் | பொருளொன் | ௪௰ | ௧௮ |
| காமவனெ | காமவனே | ௪௫ | ௧௫ |
| அல்லயெ | அல்லயோ | ௪௫ | ௨௧ |
| ஆகனினால் | ஆதலினால் | ௪௮ | ௨ |
| பன்னாற் | பன்னாற் | ௫௪ | ௯ |
| பன்பைக் | பண்பைக் | ௫௪ | ௬ |
| மரண்பெனவே | மாண்பெனவே | ௫௧ | ௨௪ |
| மிகமணக்கப | மிகமணக்கப் | ௯௭ | ௨௪ |
| தனவைசியர் | தனவைசிய | ௯௮ | ௯ |